எம்பெருமானை உள்ளபடி அடைகையாகிற ஸாயுஜ்ய
நிலை ஏற்படுகிறது என்றும் உணர்த்தப்படுகிறது.
ப்ராரப்த கர்மம் முடியும் வரையில் இந்தப் பர
ஜ்ஞாந பரமபக்திகள் உபாஸக ஜ்ஞானிக்கு விளைய
வில்லையென்றால், அந்திமஸ்ம்ருதியில் அவனுடைய உபாய
பக்தியின் பலனாக பரஜ்ஞாந பரமபக்திகளை விளைத்து
அவனுக்கு மோக்ஷத்தை அளித்து விடுகிறான் எம்பெருமான்
என்றும், "உபாஸித்தபடியே பலன்" என்னும் தத்க்ரது
ந்யாயத்தாலே அவன் பெறும் பரஜ்ஞான பரமபக்திகளும்,
மோக்ஷமும் "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" [திரு
வாய் 2—9—4] என்கிறபடியே பாரார்த்தமாக
அமையாமல், ஸ்வார்த்தமாகவும் அமைந்துவிடும் என்றும்
தேறுகிறது.

## இவ்விஷயத்தில் பூர்வாசார்யர்களிடையே இரு வேறு கருத்துக்கள்

கீதையிலும் மற்ற ஶாஸ்த்ரங்களிலும் தத்வஹித
புருஷார்த்தங்களை நிர்ணயிக்கும்போது எம்பெருமானரு
டைய ஶிஷ்யப்ரஶிஷ்யர்களிடையே இரண்டுவிதமான கருத்
துக்கள் விளைந்துள்ளன. நடாதூர் அம்மாள், ஶ்ருதப்ரகா
ஶிகாசார்யர், நம்பிள்ளை தொடக்கமாய் மணவாள
மாமுனிகள் ஈருகவுள்ள திவ்யப்ரபந்த வ்யாக்யாதாக்கள்
ஆகியோருடைய கருத்து இதுவரையில் காட்டப்பட்டது.

அதன் ஸாரமாவது:— "ஜீவனுக்கு ஒவ்வொரு காரி
யத்திலும் முதல் முயற்சியில் ஸ்வாதந்த்ரியம் உண்
டென்று பராயத்தாதிகரணத்திலிருந்து தேறுகிறபடியால்
அந்த முதல் முயற்சியைப் பயன்படுத்தி, தம் ஆனந்
தத்திற்காக ஒரு பயனை விரும்பி அனுஷ்டிக்கப்படும்
ஸாதநாந்தரங்கள் அனைத்துமே ஜீவனுடைய அத்யந்த
பரதந்த்ர ஸ்வரூபத்திற்கு முரண்பட்டவை;



அந்த ஸாதநங்களை அனுஷ்டித்து மோக்ஷத்தையே
பெற்றாலும், தத்க்ரது ந்யாயத்தாலே, அந்த ஸாதநங்
களுக்குப் பலனாகக் கிடைக்கும் மோக்ஷமும் தம் ஆனந்
தத்திற்கு உறுப்பாகவே அமையும். 'தன் ஆனந்தத்திற்கு
உறுப்பாகத் தன் ஆத்மாவை அனுபவிப்பதே போதும்'
என்று நினைத்துக் கைவல்யத்தைப் பெறவிரும்பி, அதற்குரிய
ஸாதநத்தை அந்திமஸ்ம்ருதி பர்யந்தம் அனுஷ்டித்தா
னால், தத்க்ரதுந்யாயத்தின்படி கைவல்யமாகிற தாழ்ந்த
மோக்ஷமே அவனுக்கு நிரந்தரமாகக் கிடைத்துவிடும்.
தம் ஆனந்தத்தை விரும்பி பக்தியை ஸாதநமாக
அனுஷ்டிப்பவர்களுக்கும் ஸ்வார்த்தமாக பகவானை அநு
பவிப்பதை முக்கியமாகக்கொண்ட மோக்ஷம் கிடைத்து
விடும். உபாயமாக நினைத்து ப்ரபத்தியை அனுஷ்டிப்ப
வர்களுக்கும் ஸ்வார்த்தமான பகவத்கைங்கர்யத்தை
முக்கியமாகக் கொண்ட மோக்ஷம் கிடைத்துவிடும். பக்தி
நிஷ்டர்களுக்கு ஸ்வார்த்தபகவதநுபவம் ப்ரதானமாக
வும், பகவத்கைங்கர்யம் அதற்கு அடங்கியும், ப்ரபத்
தியை உபாயமாக அனுஷ்டிப்பவர்களுக்கு ஸ்வார்த்த
பகவத்கைங்கர்யம் ப்ரதானமாகவும், பகவதநுபவம்
அதற்கு உறுப்பாகவும் அமையும். முக்தியிலும் எம்பெரு
மானுடைய ஆனந்தத்தையே உத்தேஶ்யமாகக்கொண்டு
மோக்ஷத்திற்குத் தாம் ஒரு ஸாதநாநுஷ்டானத்தைக்
கைக்கொள்வது ஸ்வரூபவிருத்தம் என்று உணர்ந்து,
தாம் பற்றும் பற்று உபாயம் என்னும் எண்ணத்தைக்
கொள்ளாமல், எம்பெருமான் நம்மைப்பற்றுவதே உபாய
மாகும் என்று உறுதி பூண்டு, * சாதகம்போல் நாதன்
தனதருளே பார்த்திருக்கும் பரகதஸ்வீகார நிஷ்டர்க
ளான உத்தமஶரணாகதர்களுக்கு எம்பெருமான் நிர்ஹே
துகமாகப் பரார்த்தாநுபவ கைங்கர்யரூபமானமோக்ஷத்தை
அருளுவான் என்றபடி.

ஸ்ரீவேதாந்த தேசிகரின் ஆசார்யரான கிடாம்பி அப்
புள்ளாருக்கும் வேதாந்ததேசிகருக்கும் இக்கருத்தில் உடன்
பாடு இல்லை. ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டதாகவும்,

ரிஷிகள் அநுஷ்டி2த்து வந்ததாகவும் உள்ள ப4க்தியோக3த்தை ஸ்வரூப விருத்3த4ம் என்று கூறுவதும், அதன் ப2லனுக மோக்ஷத்திலும் ஸ்வார்த்த2 ப2லன் விளைந்துவிடும் என்று கூறுவதும் சரியல்ல என்பது இவர்களுடைய திருவுள்ளம். ப்ரத2மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ரியத்தை ஒப்புக்கொண்டால் அந்த ஸ்வாதந்த்ரியத்தைப் பயன்படுத்தி அனுஷ்டி2க்கப்படும் ஸாத4நாந்தரங்கள் ஸ்வரூபவிருத்3த4ம் என்று தேறிவிடுமாகையால் "ப்ரத2மப்ரவ்ருத்தியில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ரியம் உண்டு என்பதே சரியல்ல. ஜீவனுடைய பூர்வ பூர்வகர்மங்களே மேன்மேலே அவன் செய்யும் நன்முயற்சிகளுக்கும், தீய முயற்சிகளுக்கும் காரணமாகின்றன என்று கொண்டுவிடலாம். இதன் மூலமே எம்பெருமானுக்கு வைஷம்ய நைர்க்4ருண்ய பரிஹாரம் முதலானவை ஏற்பட்டுவிடும்" என்று இவர்கள் முற்கூறிய பல ஆசார்யர்களுடைய திருவுள்ளத்தை மறுக்க முற்பட்டிருக்கிருர்கள். இவ்வண்ணமாக "ஜீவனுக்கு ப்ரத2மப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ரியம் உண்டு; அந்த ஸ்வாதந்த்ரியத்தைப் பயன்படுத்தி மோக்ஷத்தின் பொருட்டு அனுஷ்டி2க்கப்படும் ஸாத4நாந்தரங்களும் ஸ்வரூபவிருத்3த4மே. அந்த ஸாத4நாந்தரங்களின் மூலம் அடையும் மோக்ஷமும் ஸ்வார்த்த2மாகவே அமையும்; மோக்ஷத்திலும் எம்பெருமானுடைய ஆனந்த3த்தையே உத்3தே3ஶ்யமாகக்கொண்டு அவனுடைய அருளையே ஸாத4நமாகக்கொண்டு தம்மிடமுள்ளது எதையும் ஸாத4நமாக நினைக்காத உத்தமப்ரபந்நர்களுக்கே எம்பெருமான் நிர்ஹேதுகமாக பரார்த்த2 கைங்கர்ய ப்ரத4ான மான மோக்ஷத்தை அருள்கிருன்." என்னும் தத்வ ஹித புருஷார்த்த2க் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்டு தென்னுசார்ய ஸம்ப்ரதாயமும், "ஜீவனுக்கு ப்ரத2ம ப்ரவ்ருத்தியில் ஸ்வாதந்த்ரிய லேசமும் இல்லை. ஆகையால், ஸாத4நாந்தரங்கள் ஸ்வரூபவிருத்3த4ம் என்னும் பேச்சுக்கே இடமில்லை. ஆகையால் முக்தியிலும் ஸ்வார்த்த2ம் பரார்த்த2ம் என்று இருவகை மோக்ஷமில்லை. கைவல்யம் மோக்ஷமாகாது; தலைசிறந்ததொரு ஐஶ்வர்யமே" என்னும்



தத்வ ஹித புருஷார்த்த2க் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு தேசிக ஸம்ப்ரதாயமும் வளர்ந்துள்ளன என்று விளங்குகிறது.

இக்கருத்து வேற்றுமையால் கீதையில் பரமஸாரமான ஶ்லோகமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவராலும் கொண்டாடப்படும் சரமஶ்லோகத்திற்குப் பொருள் கொள்வதிலும் ஸ்ரீவேத3ாந்த தேசிகருக்கும், மற்ற ஆசார்யர்களுக்கும் கருத்துவேற்றுமை விளைந்துள்ளது. ப4ட்டருடைய அஷ்டஶ்லோகீ, பெரியவாச்சான் பிள்ளையின் பரந்த ரஹஸ்யம், பிள்ளை லோகாசார்யரின் முமுக்ஷுப்படி முதலிய தென்னுசார்ய க்ரந்தங்களின்படி சரமஶ்லோகத்தின் பொருள் பின்வருமாறு:— "செயற்கரியவையாய் அதயந்தபாதந்த்ரமான ஜீவஸ்வரூபத்திற்குத் தகாதவையான கர்மஜ்ஞாந ப4க்தி யோக3ங்கள் முதலான சேதந ப்ரவ்ருத்தி ரூபமானமோக்ஷோபாயங்கள் அனைத்தையும் 'உபாயமல்லாத இவற்றை உபாயமென்று எண்ணினேமே' என்ற லஜ்ஜையுடன் அடியோடு விட்டு என் ஒருவனையே உபாயமாகக்கொள்வாய். என்னை உபாயமாக நீ பற்றும்பற்றையும் உபாயம் என்றுஎண்ணுதே. இப்படிப்பட்ட உன்னை ஜ்ஞாநம், ஶக்தி முதலான குணங்கள் நிறைந்த நான், என்னை அடையத் தடையாயிருக்கும் எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்" என்றபடி.

ஸ்ரீவேதாந்த தேசிகரின் தாத்பர்ய சந்த்ரிகை, ரஹஸ்ய த்ரயஸாரம் ம்ுதலிய க்ரந்தங்களின்படி சரம ஶ்லோகத்தின் பொருள் பின்வருமாறு;— கர்மஜ்ஞாநயோக3ங்களை அங்கமாகக் கொண்ட ப4க்தியோக3த்தை அநுஷ்டி2ப்பதற்கு சக்தியுள்ளவன், இந்த ஜந்மத்திலேயே மோக்ஷமடையவேண்டும் என்னும் த்வரையில்லாமலிருந்தால் ப4க்தி யோக3த்தையே மோக்ஷோபாயமாகவும், ப்ரபத்தியை அங்க3மாகவும் அனுஷ்டி2க்கவேண்டும். அப்படி ப4க்தியோக3த்தை அனுஷ்டிப்பதற்கு ஜ்ஞாந ஶக்திகள் இல்லாதவர்களாலும், ஜ்ஞாநஶக்திகள் இருந்தாலும் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடையவேண்டும் என்னும் த்வரையுடையவர்களாலும் முக்2யப்ரபத்தியே அனுஷ்டி2க்கத்தக்கது.

அவர்களுக்கு 'ப4க்தி முதலான எல்லாமோக்ஷோபாயங்களை யும் கைவிட்டு என்னை ஒருவனையே மோக்ஷோபாயமாகக் கொள்ளும் ஶரணாகதியை அநுஷ்டிப்பாய். நீ பற்றும் பற்றையும் எம்பெருமானுக்குத் துல்யமான உபாயமாகக் கருதாதே. இப்படி சரணாக3தியை அநுஷ்டித்த உன்னை நான் என்னை அடையத் தடையாயிருக்கும் எல்லாப் பாபங் களினின்றும் விடுவிக்கிறேன்' என்பது சரமஶ்லோகத்தின் பொருள். அங்க3ப்ரபத்தி செய்பவர்களுக்கு "ப4க்தியோக3ம் தொடங்குவதற்குத் தடையான பாபங்களையோ, ப4க்தி யோக3த்தைத் தொடர்ந்து அநுஷ்டி2ப்பதற்குத் தடை யான பாபங்களையோ நீக்கிக்கொள்வதற்குத் தன்னால் இய லாதென்று கருதினால் அதன் பொருட்டு என்னையே சரண மடைவாய். அந்தப் பாபங்களனைத்தையும் உனக்கு நான் நீக்குகிறேன்" என்பது சரமஶ்லோகத்தின் பொருள். ஆக, இந்த சரமஶ்லோகம் முக்யப்ரபத்தி செய்பவர்களுக்கும், ப4க்தி யோக3த்தின் அங்கமாக ப்ரபத்தி செய்பவர்களுக்கும் பொது வானது. அவரவருக்குத் தக்கபடி பொருள் வேறுபடுகிறது என்பது ஸ்ரீவேதாந்த தேசிகரின் திருவுள்ளமாகும்.

## முடிவுரை

இவற்றிலிருந்து "சேதநாசேதந விஶிஷ்டமான பரப்3ரஹ்ம மான ஸ்ரீமந்நாராயணனே 'தத்வம்' என்பது ஸகல பூர்வாசார் யர்களும் உடன்பட்ட கீதா தாத்பர்யமாகும்; ஹித புருஷார்த்த2 விஷயத்தில் 'இரக்கத்தோடு கூடிய அப்பரமபுருஷனே உபாயம், சேதநனின் முயற்சிகள் எதுவும் உபாயமல்ல; அப்பரமபுருஷ னின் உகப்புக்குரிய கைங்கர்யமே பரமபுருஷார்த்த2ம்; தன் முயற்சியில் உபாயம் என்னும் எண்ணம் கொள்பவர்கள் அடை யும் ஸ்வார்த்த2மோக்ஷமும் கைவல்யமோக்ஷமும் பரம புருஷார்த் தங்களல்ல' என்பது தென்னாசார்யர்களின் திருவுள்ளம்; 'ப4க்தி யும் ப்ரபத்தியும் மோக்ஷத்திற்கு ஸாத்4யோபாயங்கள். ப4க்தர் ப்ரபந்நர் இருவர்க்கும் எம்பெருமான் மோக்ஷத்தில் ஒரேவகையான புருஷார்த்த2த்தை அளிக்கும் ஸித்3தோ4பாயம். மோக்ஷத்தில் ஸ்வார்த்த2 பரார்த்த2பே4த3ம் இல்லை. கைவல்யம் மோக்ஷமல்ல; ஸம்ஸாரமண்டலத்தில் அநுபவிக்கப்படும் ஓர் ஐஶ்வர்யமே யாகும்' என்பது ஸ்ரீவேதாந்ததேசிகரின் திருவுள்ளம்" என்று தேறுகிறது.

---

இக்கட்டுரை சென்னைப்பல்கலைக்கழகம் வைணவத்துறையின் ஆதரவில் 1995 நவம்பர் 14, 15 தேதிகளில் நிகழ்த்தப்பெற்ற அறக்கட்டளைச் சொற்பொழிவாகும்.